Reged. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன்-395

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர், மஹாவித்வான்

# SRI RAMANUJAN,

Editor:
*Mahamahimopadhyaya:*
P. B. ANNANGARACHARYA, Kanchipuram-631503

வருடச் சந்தா ரூ. 10

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



பெருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

துன்மதி வருஷம் 1981

**P. B அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்**

| | | | |
|---|---|---|---|
| யிர திவ்யப்பிரபந்த வுரைகள். | | 9 | வேதவிசாரலக்ஷண நூல்கள். |
| சார்ய தமிழ்ப்பிரபந்த | ,, | 10 | லோகாபிராம உபந்யாஸ ,, |
| பூர்வாசார்ய ஸ்தோத்ர | ,, | 11 | பரபக்ஷப்ரக்ஷேப ,, |
| வாராசார்யப் பிரபாவ நூல்கள் | | 12 | உபந்யாஸ ஸௌபாக்ய ,, |
| ஹாஸ புராண சரித்திர | ,, | 13 | வடமொழி நூல் திரள்கள் |
| ஸ்யார்த்த விளக்க | ,, | 14 | ஹிந்தி பாஷையில் நூல்கள் |
| நாந்தப் பொருள் விளக்க | ,, | 15 | தெலுங்கு பஷையில் ,, |
| ம்ப்ரதாயார்த்த விளக்க | ,, | 16 | பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள். |

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காணக.

ணம் M. O. செய்பவர்கள்:

. ANNANGARACHARYA,
Editor, Granthamala, Kancheepuram-631503
என்ற விலாசத்திற்கு அனுப்புக.

livered please return to:

P. B. ANNANGARACHARYA,
Kanchipuram. Pin Code-631503



To
Sriman

Edited and Published by P. B. Annangaracharya Swami
and Printed by B. Devarajan at Sri Kamakshi Press,
No. 44-c, Thirukatchinambi Street, Kanchipuram- 631503.

# ஸ்ரீராமாநுஜன்-395, 396



ஆசிரியர்.
ஸ்ரீ காஞ்சி மஹாவித்வான் P.B, அண்ணங்கராசாரியர்

தொகுதி 34 } துன்மதி ஹு ஆனி, ஆடி மீ 1981 { பகுதி 3, 4

ஸ்ரீரஸ்து

## கச்சிமாநகரில் சதாபிஷேக மஹோத்ஸவ நிகழ்ச்சி



பூருவாசாரியர்களோடொப்ப மதிக்கத்தக்க பெருமை வாய்ந்தவரும், சதுச்சாஸ்த்ர வித்வத்தமரும் வடநாட்டில் நிரம்பிய சிஷ்ய ஸம்பத் ஸம்ருத்தருமான ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் ஜகத்குரு காதி அனந்தாசார்ய ஸ்வாமியை ஸ்ரீ வைஷ்ணவவுலகில் கேள்விப்படாதாரில்லை. இந்த ஸ்வாமியின் பாஞ்சபௌதிகமான திருமேனி மறைந்து 50 ஸம்வத்ஸரங்களுக்கு மேலாயும் என்று மழியாப்புகழுடம்புடனே நித்யஸ்ரீர் நித்யமங்களமாக விளங்குபவர் இந்த மஹாஸ்வாமி. இவருடைய அத்விதீயரான திருக்குமாரரும் ✳பிதுச் சதகுண:புத்ர:✳ என்னும்படி விளங்குபவருமான ஸ்ரீமதுபயவே

ஸ்ரீ க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியும் ஜகத்விக்யாதராய் விளங்கிவருகிருர்; காஞ்சீபுரம் தேவப்பெருமாளுடைய ஸன்னிதிவீதியில் பெரிய திருமாளி கையில் ஸேவித்து வருகிறோம்.

இந்த ஸ்வாமிக்கு நிகழும் ஆவணித் திங்களில் ஸ்வாதீ நக்ஷத் திரத்தில் எண்பது பிராயப்பூர்த்தியை முன்னிட்டு சதாபிஷேக மஹோத் ஸவம் பதினெருநாள் மிகச் சிறப்பாக நடைபெற்றது. நாலாயிரதிவ்ய ப்ரபந்தஸேவையும் வேதபாராயணமும் ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயாதி பாராயணமும் வித்வான்களின் உபந்யாஸங்களுமாய் நிகழ்ந்தவைபவங் கள் விலக்ஷணமானவை. இவை சிறிதே விவரிக்கப்படுகின்றன.

சிஷ்யர்கள் ஆப்தர்கள் உறவினர்களுமாகப் பல நூற்றுவர் பத்து நாளும் ஸமரூபமாகக் குழுமியிருந்தனர். காலையில் இரண்டு மணி காலமும் மாலையில் இரண்டு மணி காலமுமாக தினப்படி நான்கு மணி காலம் வேதபாராயணமும், திவ்யப்ரபந்தஸேவையும் ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயாதி பாராயணமும் நிகழ்ந்தன இரண்டு மூன்றிடங்களில் ததீ யாராதனை நடந்துவந்தது. ஹிந்தீபாஷாபிஜ்ஞர்களுக்காக அண்ணு ஸன்னிதியில் ஹிந்தியில் உபந்யாஸங்கள் நடத்த ஏற்பாடாகியிருந்தது. உபய வேதபாராயண ஸ்வாமிகள் கோயில் திருமலை திருப்பதி, ஆழ்வார் திருநகரி, வானமாமலை திருவாலி திருநாங்கூர் திருக்கண்ணபுரம் திரு நகரியிலிருந்து எழுந்தருளியிருந்தார்கள். பெரும்பாலும் எல்லாதிவ்ய தேசங்களிலிருந்தும் பட்டுப்பீதாம்பரங்கள் திருப்பரிவட்டங்கள் மாலைமரி யாதைகள் சிறப்பாக அனுப்பப்பட்டன; அவ்வவற்றுக்குத்தக்க டி பிரதி ஸம்பாவனைகளும் செய்யப்பட்டன.

## உபந்யாஸ நிகழ்ச்சிகள்

கோயில் நின்றும் எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே திருமலை அனந்தாண்பிள்ளை சதாபிஷேகம் கோவிந்தநரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி, ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சந பத்ராதிப ஸ்வாமி, சோளஸிம்ஹபுரத்தி லிருந்து எழுந்தருளியிருந்த ஸ்ரீ கோ. கம். சண்டமாருதம் பொயப்பங் கார் ஸ்வாமி, திருநாங்கூர் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி, ஸ்ரீவில்லிபுத்தூர் விஞ்சிமூர் ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி—



ஆகிய வித்வன்மணிகளின் உபந்யாஸங்கள் ஒவ்வொருநாளில் நடை பெற்றிருக்கின்றன. அவற்றை எழுதியனுப்பும்படி அந்த ஸ்வாமி களுக்கு விண்ணப்பமனுப்பியிருக்கிறேன். இக்கட்டுரையின் முடிவில் அவை வெளியிடப்படும்.

25—8—81 முதல் 3—9—81 வரை அடியேன் விஜ்ஞாபித்த உபந்யாஸங்களுக்கு மகுடம்:—

ஸ்ரீமதுபயவே ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கர
காதி ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமிந: சிரம் ஜீயாஸு:.

இதில் ஒவ்வோரக்ஷரத்திற்கும் ஒவ்வொரு ஆசார்ய ஸ்ரீஸூக்தி யைக் கொண்டு விவரணமும் செய்தேன். அது கீழ்வருமாறு.—

**ஸ்ரீ**

ஸ்ரீமத்வ்யோம நஸீம வாங்மநஸயோ: ஸர்வே வதாரா: க்வசித்
காலே விச்வஜநீநமேததிதி: ஸ்ரீரங்கதாமந்யத
ஆர்த்தஸ்வாகதிகை: க்ருபாகலுஷிதை ராலோகிதை ரார்த்ரயன்
விச்வத்ராண விமர்சநஸ்கலிதயா நித்ராஸி ஜாகர்யயா''

(ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகே—75)

ஸ்ரீரங்கநாதா!,
''பரமபதம் வாக்குக்கும் நெஞ்சுக்கும் எட்டாதது. விபவாவதாரங்கள் யாவும் ஏதோவொரு ஸமயத்திலே நடந்து முடிந்தவை, இந்த அர்ச்சாவதாரநிலை தான் ஸகலஜநஹிதமானது''. என்றிப்படிப்பட்ட திருவுள்ளத்தையுடையீராய், திருவரங்கம் பெரியகோயிலில் ஆர்த்தர்களை நோக்கிக் குசலப்ரச்நம் பண்ணுகின்ற வையும் க்ருபையினல் கலங்கிச் சேதநர்களின் குணதோஷவிசாரம் பண்ணமாட்டா தவையுமான கடாக்ஷங்களினல் (தாபத்ரயாதுரர்களைக்) குளிரச்செய்தருளாநின்ற தேவரீர் ஜகத்ரக்ஷண சிந்தையோடு கூடின ஜாகரணரூபமாகத் திருக்கண்வளர்ந் தருளா நின்றீர் ... ... ... X

**ம**

மது மதுரம் ததி மதுரம் த்ராக்ஷா மதுரா ஸிதாபி மதுரைவ,
மதுராதபி மதுரதரா மதுரா நாதஸ்ய மாதவஸ்ய கதா''

இனிப்பான பொருள்களைச் சொல்லுபார்ப்போமென்று ஒருவர் கேட்டார். தேன் இனிப்பானது, தயிர் இனிப்பானது. திராக்ஷை இனிப்பானது. வெள்ளைச் சர்க்கரையும் இனிமையானது என்று சொல்ல, அதுகேட்டவர் மதுரைமன்னனை மாதவனுடைய கதையே இனிமையானது மற்றெல்லாவற்றைக் காட்டிலும் இதுவே இனிமையானது. என்று தலைக்கட்டுகிருர். ... X

**து** **துக்தாப்திர் ஜநகோ ஜநந்யஹமியம் ஸ்ரீரேவ புத்ரீ வர:
ஸ்ரீரங்கேச்வர ஏததர்ஹமிஹ கிம் குர்யாமிதீவாகுலா
சஞ்சச்சாமர சந்த்ர சந்தந மஹாமாணிக்ய முக்தோத்கராந்
காவேரீ லஹரீகரைர் வித ததீ பர்யேதி ஸா ஸேவ்யதாம்.**

ஸ்ரீரங்கராஜஸ்தவே—பூர்வசதகே—21

தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலையில் ''தெளிவிலாக்கலங்கல் நீர் சூழ்'' என்றருளியதற்கு சமத்காரமான ஸமர்த்தனம் இது.

''திருப்பாற்கடல் தந்தை; அக்கடலின் மனைவியாகிய நான் தாய்; இந்த ஸ்ரீரங்கநாயகியோ மகள்; அழகியமணவாளன் மணவாளப்பிள்ளை; இப்படி யிருக்கையில் இந்த மகளுக்கும் மணவாளப்பிள்ளைக்கும் தகுதியாக என்ன சிறப் பைச் செய்யக்கடவேன்'' என்று காவிரியானவள் வ்யாகுலப்பட்டவள்போல, சாமரங்களென்ன பச்சைக் கருப்பூரமென்ன சந்தனமரங்களென்ன சிறந்த ரத்னங்களென்ன முத்துக்களென்ன இவற்றின் குவியல்களை அலைகளாகிற கைகளி னால் ஏந்திக்கொண்டு பெருகுகின்றனள், அப்படிப்பட்ட காவிரியானது (ஜனங்க ளால்) நீராடப்பெறவேணும், ... ... — X

**ப** **பக்தாநாம் யத் வபுஷி தஹரம் பண்டிதம் புண்டரீகம்
யச்சாம்லாநம் வரத ஸததாத்யாஸநாதாஸநாப்ஜம்
ஆம்நாயாநாம் யதபி ச சிரோ யச்ச மூர்த்தா சடாரே:
ஹஸ்த்யத்ரேர்வா கிமதிஸுகதம் தேஷு பாதாப்ஜயோஸ் தே.**

வரதராஜஸ்தவே—58

ஓ வரதனே! பக்தர்களான யோகிகளுடைய மேனியில் ஞானவிகாஸசாலி யாய் தஹரமென்னும் பேருடையதாய் யாதொரு தாமரை யுண்டோ, (பரமபதத் தில்) நீ எப்போதும் வீற்றிருக்கப்பெற்றதாய் வாட்டமடையாத ஆஸநத்தாமரை யென்று யாதொன்றுண்டோ, வேதாந்த மென்பது யாதொன்றுண்டோ, நம்மாழ் வாருடைய திருமுடி யாதொன்றுண்டோ, இந்த ஹஸ்திகிரியின் சிகரம் யாதொன் றுண்டோ, ஆக ப்ரஸித்தமான இந்த ஸ்தானங்களுள் உன் திருவடித்தாமரை களுக்கு மிக்க ஸுகத்தைக்கொடுக்கிற இடம் எது கொல்? (இது வினவுகிறபடி யன்று. இவையெல்லாம் உனக்குப் பரமபோக்யங்களென்று அநுபவிக்கிறபடி)

**ய** **யத்யமுஷ்மிந்லோகே அஸ்தி வா நவேதி.**

ஸத்திரீய ஸப்ஹிதாயாம் ஆறுவது காண்டம். முதல்பஞ்சாதி

திருமங்கையாழ்வார் திருமடல்களிரண்டிலும் பரமபதத்தை இல்லைசெய்த தும் குறைபடக்கூறியதும் ×நஹிநிந்தா நியாயரீதியிலன்றோ, அப்படியே வேத



புருஷனும்; **''நாஸ்மால்லோகாத் ஸ்வேதவ்யமிவேத்யாஹு: கோ ஹி தத் வேத யத்யமுஷ்மிந் லோகே அஸ்திவா ந வேதி''** என்றோதுகிறபடி. இவ் வுலக பேர்க்கினைத் விட்டுவிட்டு மேலுலகம் செல்ல விரும்பக்கூடாதென்று ப்ரஹ்ம வித்துக்கள் சொல்லுகிறார்கள்; மேலுலகத்தில் ஒன்றுண்டென்று யாரறிந்தார்?

**வே.** **வேதோத்தம்ஸ குஹாவிஹாரபடுநா ஸ்ரீசைலச்ருங்கோல்லஸந்-
மாயாகேஸரி மாநிதேந கஹநந்யாயாடவீசாரிணா,
கம்பீரேண ப்ராத்மபேதநமஹாநாதேந நாதேந மே
குப்தோஹம் யதிஸார்வபௌமஹரிணா வர்த்தே ப்ருசம் நிர்ப்பய.**

எம்பெருமானர் விஷயமாக எம்பாரருளிய முக்தகம்.

இராமாநுச நூற்றந்தாதியில் ''வலிமிக்கசீயமிராமானுசன்'' என்றருளிச் செய்ததை அடியொற்றி ஸ்வாமியை ஸிம்ஹமாக ரூபிக்கிறார். காடகத்தில் பர்த்வாஜோபாக்யானத்தில் மலைகளாகச் சொல்லப்பட்ட வேதத்தில் வேதாந்தங்களாகிற குஹைகளுக்குள் விளையாடுவதில் வல்லமைபெற்றதும், திரு வேங்கடமலையினுச்சியில் விளங்காநின்ற மாயா(நர) ஸிம்ஹத்தினால் (திருவேங் கடமுடையானால்) ஸன்மானிக்கப் பெற்றதும், கொடிய (அறிதற்கரிய) ந்யாயங்கள் (யுக்திகள் அல்லது ப்ரஹ்மஸூத்ரங்கள்) என்னும் காட்டில் ஸஞ்சரிக்கப்பெற் றதும், கம்பீரமானதும், பிறவுயிர்களின் நெஞ்சைப் பிளக்கும் கர்ஜனையுடையதும் பரமாத்ம ஜீவாத்மாக்களுக்குள்ள பேதத்தை போதிக்கும் திருமிடற்றோசையை யுடையதும், அடியேனை யாள்வதுமான யதிராஜ (ராமாநுஜ) ஸிம்ஹத்தினால் காப் பாற்றப்பட்ட அடியேன் (மதாந்தரஸ்தர்களென்கிறமத்தகஜங்களிடமிருந்து உண் டாகிற) பயம் சிறிதும் அற்றவனாய் இருக்கிறேன், ஆக இதுவரையில், ஸ்ரீமதுபயவே தாந்திற ஆறெழுத்துக்களை பீஜாக்ஷரம் போல் வைத்து விவரணம் காட்டப்பட்டது. இனி, மேலும் கேளீர்;—ஸ்ரீரங்கீ என்பது.

**ஸ்ரீ** **ரங்கம் கரிசைலமஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரிஸிம்ஹாசலௌ
ஸ்ரீ கூர்மம் புருஷோத்தமஞ்ச பதரீ நாராயணம் நைமிசம்,
ஸ்ரீமத்த்வாரவதீப்ரயாக மதுராயோத்யாகயாபுஷ்கரம்
ஸாளக்ராமகிரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோயம் முநி:.**

இது பட்டர் அருளிச்செய்த முக்தகம்

திருவரங்கம் பெரியகோயில், பெருமாள் கோயில், திருமலை, திருநாராயண புரம், ஸிம்ஹாசலம், ஸ்ரீ கூர்மம், புரீஜகந்நாதம், பதரிகாச்ரமம், நைமிசாரண் யம், த்வாரகை, ப்ரயாகை, வடதிசை மதுரை, அயோத்தி, கயை, புஷ்கரம், ஸாளக்ராமம் முதலிய க்ஷேத்ரங்களை ஸேவித்துக்கொண்டு திருவுள்ளமுகக்கிறார் எம்பெருமானார். (இப்படி வெளியூர்களிலே ஸஞ்சரிப்பதைப் பொறுத ஸ்ரீரங்க

நாதன் ஒருநாள் உடையவர் திருமுடியிலே ஸ்ரீ சடகோபனை வைத்தருளி ''த்வய மர்த்தாநு ஸந்தாநேந ஸஹ ஸதா ஏவம் வக்தா யாவச்சரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ'' என்று நியமித்தருளினுயிற்று. ... ... X

**காஞ்** காஞ்சநாசலச்ருங்காக்ர காளமேகாநுஸாரிணே,
ஸுபர்ணம்ஸாவதம்ஸாய ஸுரராஜாய மங்களம்-

மணவாளமாமுனிகளருளிய தேவராஜ மங்களம்

'பொன்மலையின் மீமிசைக்கார் முகில் போல்' என்னுமருளிச்செயலின்படியே மேருமலையினுச்சியில் காளமேகம் விளங்குவதுபோல் பெரிய திருவடியின்மீது விளங்கும் நீலமேகநிபரான பேரருளாளப் பெருமாளுக்குப் பல்லாண்டு பாடினு ராயிற்று, ... ... X

**ஸ்ரீ** ஸீரம் வஸாநோ வஸதாதரண்யே சதுர்தசாப்தா நிதி ஸாயயாசே,
ததா து ராமஸ்ய முகாரவிந்தே விகாஸபூமா வசஸாமபூமி:.

முதலில் ஸ்ரீராமபட்டாபிஷேகம் கோடித்திருந்த காலையில், கைகேசி, இராமன் மரவுரியுடுத்துப் பதினன்கு ஆண்டு வனவாஸம் செய்யவேணுமென்று வரம் வேண்டினுள். அப்போது ''வநவாஸோ மஹோதய:'' என்று மகிழ்ந்து பேசின இராமனது திருமுகமண்டலத்திலுண்டான விகாஸாதிசயம் வாசாம கோசரமாயிருந்தது.

இங்கே கம்பர் பாசுரம்;—

''இப்பொழு தெம்மனோரால் இயம்புதற்கெளிதோ? யாரும்
செப்பருங் குணத்திராமன் திருமுகச் செவ்விநோக்கின்
ஒப்பதே முன்பு, பின்பு வாசகமுரைக்கக் கேட்ட
அப்பொழு தலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா!''

**ப்ர** ப்ரஸித்த' பரகோஷ்டீஷு பரவாதி பயங்கர:
ஸ்ரீவைஷ்ணவாநாம் கோஷ்டீஷு தத்தாஸ இதி விச்ருத:.

அஸ்மத் குலகூடஸ்தரான அண்ணு மணவாளமாமுனிகள் பக்கல் முந்துற முன்னம் விடைகொண்டபோது வார்த்தா ப்ரஸங்கத்திலே ''நீர் ப்ரதிவாதி பயங்கரரன்றோ?'' என்றருளிச் செய்ய, அப்போது அண்ணு விண்ணப்பம் செய்த சுலோகமிது. அதுமுதலாக அடியோங்களுக்கு தாஸ்ய நாமம் ஸ்ரீ வைஷ்ணவ தாஸன் என வழங்கி வருகின்றது. ... ... ... X

**ஸ்ரீ** திமிம் கில திமிங்கிலோ கிலதி தத்கிலஸ் தம் ததா
தமப்யத ச தத்கிலஸ் ததிஹ பச்ய கர்ம க்ரமேம.



ஸமஸ்தவ்ருஜிநோததிக்ரஸநடம்பகும்போத்பவம்
நிவ்ருத்திமபி தர்மமத்தி அநகதத்வவிந்நிக்ரஹ:

ஸங்கல்ப ஸூர்யோதயே

கடலில் திமி யென்பதொரு ஜந்து; அதை விழுங்குவது திமிங்கிலம்; அதையும் விழுங்குவது திமிங்கிலகிலம்; அதையும் விழுங்குவது திமிங்கிலகிலகிலம். இப்படியே மேன்மேலும் பலவற்றையும் விழுங்குவது திமிங்கிலகிலகில......கிலம் இவ்விதமாக ஸமஸ்தபாபங்களையும் விழுங்குவது சரணுகதி தர்மம்; அதையும் விழுங்குவது பாகவதாபசாரம். ஆகவே பாகவதாபசாரத்திற்கு அஞ்சி வர்த்திக்க வேணுமென்று காட்டினபடி. ... ... ... X

**வா** வாக்ச மநச்சார்த்தீயேதாமஹம் தேவேப்யோ ஹவ்யம்வஹாமீதி
வாகப்ரவீத் தஸ்மாந்மநஸா ப்ரஜாபதயே ஜுஹ்வதி.''

தைத்திரீய ஸம்ஹிதையில் இரண்டாவது காண்டத்தில் ஐந்தாம் ப்ரச்நம்

ஹவ்யகவ்யங்களில் ஆகாரஹோமத்தில் ''ப்ரஜாபதிம் மநஸா த்யாயந் ஆகாராவாகாரயதி'' என்கிருேமென்பது உலகப்ரஸித்தம்; அதற்கு இந்த ஆக்யாயிகை ஓதப்பட்டுள்ளது. (கருத்துச் சுருக்கம்) வாக்கும் மனமும் விவாதப் பட்டன; நான்தான் தேவர்களுக்கு ஹவிஸ்ஸை வஹிக்கிறேனென்று வாக்கு சொல்லிற்று; நான்தான் என்று மனஸ்ஸு சொல்லிற்று; முடிவாக இரண்டும் ப்ரஜ பதியிடம் மத்யஸ்தப்ரச்நம் கேட்டன; வாக்கு, மநஸ்ஸுக்கு பணிவிடை; செய்வதாகையாலே மநஸ்ஸே முக்கியமானது என்று ப்ரஜாபதி முடிவு கூறினர் அதனல் கோவங்கொண்ட வாக்கானது ப்ரஜாபதியை நோக்கி 'எனக்கு நீர் இழிவு சொன்னபடியாலே உர்மை நான் வாக்காலே ஹோமம் செய்யமாட்டேனென்றது ஆகவேதான் ''ப்ரஜாபதிம் மநஸா த்யாயந் ஆகாராவாகாரயதி'' என்கிற மந்த்ரம் ஏற்பட்டது. ... ... X

**ஸ்ரீ** ''திவ்யமித்யேஷ சப்தஸ்து கீதாசாஸ்த்ரே த்விருச்யதே,
ஸ்ரீவைஷ்ணவாநாம் ஸமயே த்ரிதயம் ஹி விசிஷ்யதே

உலகில் சிறந்த பொருளைச் சொல்லுமிடத்து திவ்யம் என்கிருேம்; ஸங்கீதம் திவ்யமாயிருந்தது; ததீயாராதனை திவ்யமாயிருந்தது. என்கிருேமல்லவா? பகவத்கீதையில் அவதாராத்யாய (4) த்தில் ×ஜந்ம கர்ம ச மே திவ்யம்× என்றது; மேல் விச்வரூபாத்யாய (11) த்தில் 0திவ்யம் ததாமி தே சக்ஷு:0 என்றது. ஸ்ரீ வைஷ்ணவஸம்ப்ரதாயத்தில் ப்ரமாண—ப்ரமாத்ரு – ப்ரமேயங்களைச் சொல்லுமிடத்து திவ்யப்ரபந்தம், திவ்யஸூரிகள், திவ்யதேசங்கள் என்கிருேம். இதனல் ஸ்ரீவைஷ்ணவ ஸமயத்தின் சிறப்பு அறியத்தக்கது. ... ... X

ப

மஜத்ஸ்ய வாத்ஸல்யவசாத் ஸ்முத்ஸுக:
ப்ரதாமமத்ராவதரேர்வரப்ரத,
பவேச்ச தேஷாம் ஸ்யலபோத கிம்நவிதம்
யதங்க! தாம்நா நியத: புராருத:.

வரதராஜஸ்தவே

எம்பெருமான் அவதாரங்கள் செய்தருளாமல், அவதரித்துச் செய்ய வேண்டிய காரியங்களை ஸங்கல்பத்தாலே செய்திருக்கலாமே என்றொரு வாதம்: தேவப்பெருமாளே! பக்தர்கள் பக்கலிலே வாத்ஸல்யாதிசயத்தாலே அவர்களோடு கலந்து பரிமாறுகைக்காக அவதாரங்கள் செய்தீரென்று கொள்வோம்; அவதரித்த விடத்திலே பக்தஸுலபராயிருந்ததற்குமேலே வெண்ணெய் களவு செய்த வியாஜத்தினால் தாம்பினால் கட்டுண்டு அழுதீரே, இஃது என்கொல்! ... X

யம்

யம்யம் ஸ்ப்ருசதி பாணிப்யாம் யம்யம் பச்யதி சக்ஷுஷா,
ஸ்தாவராண்யபி முச்யந்தே கிம் புநர் பாந்தவா ஜநா:?

மஹான்களின் பெருமை சொல்லுகிறது. ஹஸ்தஸ்பர்சமாத்ரத்தாலும்; திருக்கண்பார்வையினாலும் ஸ்தாவரங்களையும் புனிதமாக்குவர் பெரியோர்; உறவினரைப் புனிதமாக்கக் கேட்கவேணுமோ? ... ... X

க

கரிஷ்யாமி கரிஷ்யாமி கரிஷ்யாமீதி மாவத,
க்ருதவாந் க்ருதவாநஸ்மீத்யபிதேஹி ஸகே ஸதா

நல்ல காரியத்தைச் செய்யென்று பெரியோர்கள் சொன்னால் "ஆகட்டும் செய்கிறேன். ஆகட்டும் செய்கிறேன்' என்று சொல்லிப் போதைப் போக்காதே; உடனே செய்துவிட்டுச் செய்தாயிற்றென்று சொல்லு ... X

ர

ரத்நாகரஸ் தவ க்ருஹ க்ருஹிணீ ச லக்ஷ்மீ;
கிம் தேயமஸ்தி பவதே புருஷோத்தமாய,
ஆபீரவாமநயநாஹ்ருத மாநஸாய
துப்யம் ப்ரதத்தமிதமஸ்து மநோ மதீயம்.

ஒரு ஸ்வாமி, வீதியில் பெருமாள் எழுந்தருளும் போதெல்லாம் நியமேந உபஹாரம் ஸமர்ப்பிப்பது வழக்கம்; ஒருநாள் அகஸ்மாத் பெருமாள் எழுந்தருளி விட்டார். உபஹாரம் ஸித்தப்படுத்தவில்லை. பெருமாளெதிரே சென்று நின்று வெகு சாதுர்யமாக விண்ணப்பம் செய்கிறார் இந்த சுலோகத்தை. எம்பெருமானே! உனக்கு நான் ஒன்று ஸமர்ப்பிக்கவேண்டும்படி என்ன குறை? உனது இருப்பிடமோ ரத்நாகரமான கடல்; தேவியாரோ ஸ்ரீ மஹாலக்ஷ்மி. நீயோ பிறரிடம் ஒன்று விரும்பாத புருஷோத்தமன். இப்படிப்பட்ட வுனக்குக் கொடுக்க என்ன இருக்கிறது? இல்லாததையன்றோ கொடுக்கவேண்டும். உனது நெஞ்சைத் திருவாய்ப்



பாடியிற் பெண்கள் கொள்ளை கொண்டபடியாலே உனக்கு இல்லாதது அது ஒன்று எது' மனஸ்ஸு. அதை அடியேன் ஸமர்ப்பிக்கிறேன்: [உன்னை நிச்சலும் சிந்திக்கிறேனென்றவாறு.] ... ... — X



சதாபிஷேகம் கண்டருளும் ஸ்வாமி

**கா** காயம்காயம் வநகிரிபதே த்வம் ஹி ப்ருந்தாவநாந்த:
கோபீஸங்கைர் விஹரஸி யதா ஸு'ந்தரவ்யூடபாஹோ,
ராஸாரம்போத்ஸவபஹு'வித ப்ரேமஸீமந்திநீநாம்
சேதச் சேதஸ் தவ ச து ததா காம் தசாமந்வபூநாம்?

ஸு'ந்தரபாஹு'ஸ்தவே

சுந்தரத் தோளுடைய பெருமானே! தேவரீர் க்ருஷ்ணவதாரத்தில் லிருந்தாவனத்தில் வேணுகாந பூர்வகமாக ஆயர் மங்கைகளோடு விஹரித்தபோது குரவைக்கூத்திலே குதூஹலமுடைய அந்த ஆய்ச்சிகளின் மனமும் தேவரீருடைய மனமும் எந்த நிலைமையிலிருந்தன; எவ்வாறு இன்புற்றன? சொல்ல முடியுமோ? [இப்படி கேட்பதன் கருத்து என்னவென்றால், அந்தப்பேரின்ப வெள்ளம் விலக்ஷணமானது என்று தம்முள்ளே தாம் குழைகிறபடி.] ... X

**தி** திவி வா புவி வா மமாஸ்து வாஸோ
நரகே வா நரகாந்தக ப்ரகாமம்,
அவதீரிதசாரதாரவிந்தௌ
சரணௌ தே மரணேபி சிந்தயாநி.

முகுந்தமாலை

நரகநாசனை பெருமானே! தேவரீர் திருவுள்ளப்படி எனக்கு விண்ணுலகிலோ மண்ணுலகிலோ இருப்பு நேரட்டும்; அதில் கவலையில்லை; தேவரீருடைய சரத்காலத் தாமரை போன்ற திருவடிகளை மரணகாலத்திலும் மறவாது சிந்தித்திருக்கக்கடவேன். ... ... X

## க்ருஷ்ண

க்ருஷ்ணோ ரக்ஷது நோ ஜகத்ரய குரு: க்ருஷ்ணம்
நமஸ்யாம்யஹம்
க்ருஷ்ணேநாமாசத்ரவோ விநிஹதா; க்ருஷ்ணாய தஸ்மை நம:,
க்ருஷ்ணாதேவ ஸமுத்திதம் ஜகதிதம் க்ருஷ்ணஸ்ய
தாஸோஸ்ம்யஹம்
க்ருஷ்ணே திஷ்டதி ஸர்வமேதத்கிலம் ஹே க்ருஷ்ண
ஸம்ரக்ஷ மாம்

முகுந்தமாலை

(ஸப்த விபக்திகளையுங் கொண்ட சுலோகமிது.)

மூவுலகுக்கும் காவலோனான கண்ணபிரான் நம்மைக் காத்தருள்க; கண்ணபிரானை நான் வணங்குகிறேன்; தேவர்களின் பகைவரான அசுரராக்ஷசர்கள்



கண்ணபிரானால் வதைக்கப்பட்டனர்; அந்தக் கண்ணபிரானுக்கு நமஸ்காரம்; இந்தப் பிரபஞ்சமெல்லாம் கண்ணபிரானிடத்தில் நின்றுமே உண்டாயின; அக்கண்ணனுக்கு அடியவனுகிறேன்; இவ்வுலகமெல்லாம் கண்ணபிரானிடத்திலே நிற்கிறது; கண்ணபிரானே! என்னைக் காத்தருள். ... ... X

(ப்ரக்ருத காதி ஸ்வாமி விஷயமாக இங்ஙனே ஸப்த விபக்திச்லோகம் கேண்மின்)

**க்ருஷ்ணார்யோஷ்டஸு' திக்கஜேஷு' கணித: க்ருஷ்ணார்ய
மாசாஸ்மஹே
க்ருஷ்ணார்யேண குலம் ஹி நஸ் ஸு'மஹிதம் தஸ்மை
நமஸ்யந்த்யமீ.
க்ருஷ்ணார்யாதுதிதாஸ் த்ரயஸ் ஸு'தவரா: தஸ்ய ப்ரியா;ஸர்வத:
தஸ்மிந் ஸர்வகுணா வஸந்திமஹிதா: க்ருஷ்ணார்ய ஜீயாச் சிரம்.**

நம் ஸ்ரீக்ருஷ்ண ஸ்வாமி மணவாள மாமுனிகள் ஸ்தாபித்தருளின அஷ்டதிக்கஜாசார்யர்களில் பரிகணிதர்; நம் ஸ்வாமியைப் பலபடியாலும் மங்களாசாஸனம் செய்கிறோம்; நம் ஸ்வாமியால் நமது திருவம்சம் சிறப்புற்றது; இங்குக் குழுமியிருப்பவர்களனைவரும் நம் ஸ்வாமியைத் தொழுகின்றனர்; நம் ஸ்வாமியிடமிருந்து குணசாலிகளான திருக்குமாரர்கள் மூவர் அவதரித்தனர்; எங்குள்ளவர்களும் நம் ஸ்வாமிக்கு அன்பர்கள்; நம் ஸ்வாமி பக்கலில் ஸமஸ்தகல்யாண குணங்களும் விளங்குகின்றன; ஸ்வாமிந்! தேவரீர் நீடூழி வெற்றியுடன் வாழவேணும். X

**ஸ்வா** ஸ்வாதீநத்ரிவித சேதநாசேதநஸ்வரூப
ஸ்திதி ப்ரவ்ருத்தி பேதம். (ஸ்ரீரங்ககத்யே, ஸ்ரீவைகுண்டகத்யே ச)

திருவாய்மொழியில் முதற் பதிகத்தில் 'நாமவனிவனுவன்' அவரவர் தமதமது,* நின்றனரிருந்தனர் ஆகிய மூன்று பாசுரங்களிலும் அடைவே அருளிச் செய்யப்பட்ட விஷயம் [அதாவது—மூவகைப்பட்ட சேதநாசேதநங்களின் ஸ்வரூபம் ரக்ஷணம் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் அவனிட்டவழக்கு என்பது. இந்த விசேஷணத்தில் அற்புதமாக அருளிச்செய்யப்பட்டது. நமது தீபிகையுரையில் விரிவு காண்க. ... X

**மி** மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந,
தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம்.

ஸ்ரீ ராமாயணே-விபீஷணசரணாகதிப்ரகரணே

விபீஷணாழ்வானைப் பரிக்ரஹிக்கலாகாதென்று தடைசெய்த ஸு'க்ரீவாதிகளை மறுத்துப் பெருமாள் அருளிச்செய்தது இது. ஸ்ரீதேசிகனருளிச் செய்த

அப்யப்ரதாநஸாரத்திலுள்ள விசேஷம் கேளீர். இந்த ச்லோகத்தில் யத்யபி என்பதை வார்த்தைப்பாடாக வொதுக்கி, தோஷ: தஸ்ய ஸ்யாத்—விபீஷண னிடத்தில் தோஷமிருக்கவேணும்; தோஷமில்லாதவனைப் பரிக்ரஹித்தால் அது ஒரு ஏற்றமோ நமக்கு? என்பதாக.

ந: நமாமி நாராயணபாத பங்கஜம்
கரோமி நாராயணபூஜநம் ஸதா
வதாமி நாராயணநாம நிர்மலம்
ஸ்மராமி நாராயண தத்வமவ்யயம்.

முகுந்தமாலாயாம்

எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளைத் தொழுகின்றேன்; எப்போதும் அவனை ஆராதிக்கின்றேன்; எப்போதும் அவனது பவித்திரமான திருநாமத்தைச்சொல்லுகின்றேன். கேடில் விழுப்புகழ்க்கேசவனையே சிந்தனைசெய்கின்றேன்.

ஸி சிந்தயாமி ஹரிமேவ ஸந்ததம் மந்தமந்த ஹஸிதாநநாம்புஜம்,
நந்தகோபதநயம் பராத்பரம் நாரதாதிமுநிப்ருந்தவந்திதம்

முகுந்தமாலை

புன்முறுவல் பூத்த முகாரவிந்தத்தையுடையனாய், நந்தகோபன் குமரனாய், பராத்பரனாய், நாரதர் முதலிய முனிவர் திரளால் வணங்கப்பட்டவனான கண்ணபிரானையே எஞ்ஞான்றும் சிந்திக்கிறேன். ... — X

ரம் ரம்யேஷு தேஷு ஹர்ம்யேஷு சிரம் ரேமே ஸஸௌபரி:,
ஸாகம் பூபதிகந்யாபி: அமந்தா நந்ததுந்தில:.

ஸௌபரிசரிதே

நீர்நிலையிலே தவம்புரிந்துகொண்டிருந்த ஸௌபரி முனிவர் ஜலஜந்துக்களின் ஸகுடும்பவிஹாரத்தைக்கண்டு தாமும் குடும்பியாய் போகாநுபவம்பண்ண விரும்பித்தவம் புரிவதைவிட்டு விவாஹம் செய்து கொள்ளவிரும்பி, மாந்தாதா வென்னும் மஹாராஜனுக்குப் பல பெண்கள் இருப்பதாகவறிந்து அவனிடஞ் சென்று கந்யகாதானஞ்செய்து கொடுக்க விரும்ப, அவன் இவருடைய குரூபத்தைக் கண்டு தான்மறுக்கமாட்டாமல் பெண்களிடமனுப்ப. அப்போது இம் முனிவர் தவவலிமையினால் அதிஸுந்தரரூபத்தைக்கொள்ள, ஒவ்வொரு பெண்ணும் மேல் விழுந்து 'என்னைக்கொள்ளும், என்னைக்கொள்ளும் என்ன, முனிவர் பல வடிவங்கள்கொண்டு அக்கன்னிகளெல்லாரையும் மணந்துகொண்டு தனித்தனி மாளிகைகளில் மகிழ்ந்திருந்தபடியைக் கூறுகிறது.



ஜீ ஜீவதி யஸ்மிந் புருஷே ஜீவந்தி ப்ராணிநோதா பூயாம்ஸ:,
தம் கலு புருஷம் ப்ராஹு: பரே து ஸாமாந்ய மாநுஷாஏவ:

[நீதிசாஸ்த்ரே]

எந்தவொரு புருஷன் தான்வாழ்ந்து பலரையும் வாழ்விக்கின்றானோ, அவனையே புருஷனென்பர்கள்; மற்றையார் ஸாமாந்ய மனிதர்களே யாவர்.

யா யாமோஷதி மிவாயுஷ்மந்! அந்வேஷஸி மஹாவநே.
ஸா தேவீ மம ச ப்ராணா: ராவணேநோபயம் ஹ்ருதம்.

[ஸ்ரீ ராமாயண-ஜடாயு வார்த்தை]

முந்துற முன்னம் பஞ்சவடியில் பிராட்டியைப் பிரிந்து சோகியாநின்ற பெருமானைக்கண்ட திருவடி, தீரோதாத்தனான இந்த மஹா புருஷன் ஒரு பெண்மகளுக்காக இவ்வளவு வருந்தவேணுமோ? என்று ஹேளனமாக நினைத்திருந்தான்; அத்திருவடிதானே இலங்கையில் வந்து பிராட்டியை ஸேவித்தவாறே "துஷ்கரம் க்ருதவாந் ராமோ ஹீநோ யதநயா ப்ரபு: தாரயத்யாத்மநோ தேஹம் ந சோகே நாவஸீததி—(இந்த வநிதாரத்னத்தைப் பிரிந்த இராமன் எப்படி கோதாவரியில் விழுந்து முடியாமல் வருந்தாமல் உயிர்தரித்திருக்கிறார்!) என்று ஆச்சரியப்பட்டான். இங்கு நம் ஆசாரியர்களின் நிர்வாஹம்; உண்மையில் முடிந்திருக்க வேண்டியதுதான்; முடியாததற்குக் காரணம் ஜடாயுமஹாராஜரின் ஆயுஷ்மந் என்ற மங்களாசாஸனமே. ஆகவே அவர்க்குப் பெரிய வுடையாரென்று திருநாமம். பெரியாழ்வாரென்பது போலே.

ஸு: ஸுகமிச்சந்தி ஸர்வேபி குந்த்யேகா து:க்ககாமிநீ,
ஸ்ரீக்ருஷ்ண ஸ்வாமிவர்யஸ் து ஜீவதாத் ஸுசிரம் ஸுகீ.

உலகில் யாவரும் ஸுகத்தையே விரும்புவார்கள். குந்திதேவி யொருத்தி மட்டும் ''விபதஸ் ஸந்து நச் சச்வத் யாஸு ஸங்கீர்த்யதே ஹரி:'' என்று துக்கத்தைவிரும்பினாள். நம் காதி ஸ்வாமி நெடுநாள் ஸௌக்கியமாக வாழ்க.

நித்யஸ்ரீர் நித்ய மங்களம்.

## உபஸம்ஹாரவிஜ்ஞப்தி

கீழ் விஜ்ஞாபித்த சுலோகங்களையெல்லாம் திருச்செவி சாத்திக் கொண்டிருந்தவொரு வித்வான் தாம் ஸ்ரீமதாண்டவன் திருவடியெனப்பதைத் தெரிவித்து, அடியேனிடம் கோரினதாவது—

4

## "ஸ்ரீரங்கநாத பாதுகா ஸதா விஜயதாம்"

என்றொரு வாக்கியத்தைச் சொல்லி "இதிலுள்ள அக்ஷரங்களுக்கு சுலோகங்கள் ஸாதிக்கவேணும்" என்றார். அடுத்த க்ஷணத்தில் சுலோகங்களை வரிசையாக விஜ்ஞாபித்தேன். இவை பெரும்பாலும் தேசிக திவ்ய ஸூக்திகளாகவும் தேசிகனைப்பற்றிய ஸூக்திகளாகவுமிருப்பது காண்க. (பத்ராதிபர்)

**ஸ்ரீ** ஸ்ரீவிஷ்ணுசித்த குலநந்தந கல்பவல்லீம்
ஸ்ரீரங்கராஜ ஹரிசந்தந யோகத்ருச்யாம்,
ஸாக்ஷாத் க்ஷமாம் கருணயா கமலாமிவாந்யாம்
கோதாமநந்ய சரணச் சரணம் ப்ரபத்யே
[கோதாஸ் துதி]

**ரங்** ரங்காஸ்தாநே ரஸிகமஹிதே ரஞ்ஜிதாசேஷசித்தே
வித்வத்ஸேவாவிமலமநஸா வேங்கடேசேந க்லுப்தம்,
அக்லேசேந ப்ரணிஹிததியாம் ஆருருக்ஷோரவஸ்த்தாம்
பக்திம் காடாம் திசது பகவத்த்யாந ஸோபாந மேதத்
[பகவத்த்யாநஸோபாநே-12]

**க** ககநம் ககநாகாரம் ஸாகரஸ் ஸாகரோபம:
நிகமாந்தகுருஸ் ஸாக்ஷாந் நிகமாந்த குருபம:
[ஸ்வகீயம்]

**நா** நாதாயைவ நம பதம் பவது நச் சித்ரைச் சரித்ரக்ரமைர்
பூயோபிர் புவநாந்யமூநி குஹநா கோபாய கோபாயதே,
காளிந்தீரஸிகாய காளியபணிஸ்பாரஸ்படாவாடிகா
ரங்கோத்ஸங்கவிசங்க சங்க்ரம துராபர்யாயசர்யா;யதே
[தசாவதரா ஸ்தோத்ரே-10]

**த** தவர்க்கத்விதீயாக்ஷராதீநி பத்யாநி
அஹோ துர்லபாநீதி ஸர்வே விதந்தி,
ததச்சாத்யவர்ணாதி பத்யம் நிவேத்ய
ப்ரதிஜ்ஞாம் கதஞ்சித் ப்ரபூர்ணாம் அகார்ஷம்

த(வர்க்க த்விதியாக்ஷரத்தை முதலிலுடைய சுலோகம் துர்லபமாகையாலே தவர்க்கப்ரதமாக்ஷரத்தைக் கொண்ட சுலோகமானவிதனை விஜ்ஞாபித்து ப்ரதிஜ்ஞா பூரணம் பண்ணினேனாயிற்று.)



**பா** பாராவாரபயோ விசோஷணகலாபாரீண காலாநல
ஜ்வாலாஜாலவிஹார ஹாரி விசிகவ்யாபாரகோரக்ரம:
ஸர்வாவஸ்த ஸக்ருத்ப்ரபந்ந ஜநதாஸம்ரக்ஷணைகவ்ரதீ
தர்மோ விக்ரஹவாந் அதர்மவிரதிம் தந்வீ ஸ தந்வீத ந;
[தசாவதார ஸ்தோத்ரே 8]

**து** துரீச்வரத்வாரபஹிர் விதர்திகா
துராஸிகாயை ரசிதோயமஞ்ஜலி:,
யதஞ்ஜநாபம் நிரபாயமஸ்தி மே
தநஞ்ஜயஸ்யந்தந பூஷணம் தநம்,
[வைராக்ய பஞ்சகே-4]

**கா** காஷாயேண க்ருஹீதபீதவஸநா தண்டைஸ்த்ரிபிர் மண்டிதா
ஸா மூர்த்திர் முரமர்தநஸ்ய ஜயதி த்ரய்யந்தஸம்ரக்ஷிணீ,
யத்ப்ரக்க்யாபித தீர்த்தவர்த்திததியாம் அப்யஸ்யதாம் யத்குணம்
ஆஸிந்தோரநிதம்ப்ரதேசநியதா கீர்த்தி: ப்ரஜாகர்த்தி ந.
[யதிராஜஸப்ததி-63]

**ஸ** ஸஹதர்மசரீம் சௌரேஸ் ஸம்மந்த்ரித ஜகத்திதாம்,
அநுக்ரஹமயீம் வந்தே நித்யமஜ்ஞாத நிக்ரஹாம்.
[யதிராஜஸப்ததி-2]

**தா** தாக்ஷிண்யரம்யா கிரிசஸ்ய மூர்த்திர்
தேவீ ஸரோஜாஸநதர்மபத்நீ,
வ்யாஸாதயோபி வ்யபதேச்யவாச:
ஸ்புரந்தி ஸர்வே தவ சக்திலேசை;
[ஹயக்ரீவ ஸ்தோத்ரம்-9]

**வி** விந்த்யஸ்தம்பாத் அவிஹதகதேர் விஷ்வகாசாந்த ஸிந்தோ:
கும்பீஸூநோ ரஸாரகபளக்ராஸிந; ஸ்வைரபாஷா,
நித்யம் ஜாதா சடரிபுதநோர் நிஷ்பதந்தீ முகாத் தே
ப்ராசீநாநாம் ச்ருதிபரிஷதாம் பாதுகே! பூர்வகண்யா
[பாதுகாஸஹஸ்ரே]

**ஜ** ஜயத்யாச்ரித ஸந்த்ராஸத்வாந்த வித்வம்ஸநோதய,
ப்ரபாவாந் ஸீதயா தேவ்யா பரமவ்யோமபாஸ்கர:.
[ரகுவீரகத்யே]

யதிப்ரவரபாரதீரஸபரேண நீதம் வய:
ப்ரபுல்லபலிதம் சிர: பரமிஹ க்ஷமம் ப்ரார்த்தயே,
நிரஸ்தரிபுஸம்பவே க்வசத ரங்கமுக்க்யே விபோ
பரஸ்பரஹிதைஷிணாம் பரிஸரேஷு மாம் வர்த்தய.

[அபீதஸ்தவே-28]

தாதஸ் து தே மதுபித: ஸ்துதிலேசவச்யாத்
கர்ணாம்ருதஸ்துதிசதைரநவாப்த பூர்வம்,
த்வந்மௌலி கந்தஸுபகாம் உபஹ்ருத்ய மாலாம்
லேபே மஹத்தரபதாநுகுணம் ப்ரஸாதம்.

[கோதாஸ்துதி-10]

முநிபஹுமதஸாரா முக்திநிச்ச்ரேணிகேயம்
ஸஹ்ருதயஹ்ருதயாநாம் சாச்வதீ திஷ்டஸித்தி;
சமிததுரிதகந்தா ஸம்யமீந்த்ரஸ்ய ஸூக்தி:
பரிசிதகஹநா ந: ப்ரஸ்நுவீத ப்ரஸாதம்.

[யதிராஜஸப்ததி-28]

(இவற்றுக்குப் பொருள் விளக்கம் ஸ்ரீரங்கநாதபாதுகா பத்ரிகையின் மூலமாகவே வெளியிடுவிக்க விருப்பம். நியமனம் கிடைக்கவேணும்)

## பாம்பே மாநகரில் சதாபிஷேக மஹோத்ஸவம்

ஸ்ரீமதுபயவே. ப்ரதிவாதிபயங்கரம் காதி ஸ்ரீக்ருஷ்ணமாசார்ய ஸ்வாமிக்கு ஸ்ரீகாஞ்சியில் சதாபிஷேக மஹோத்ஸவம் 11 நாள் நடந்ததுபோல் Bombay மாநகரில் பனஸவாடியில் ஸ்ரீ வேங்கடேச்வர தேவஸ்தானத்தில், மணவாளமாமுனிகளுத்ஸவத்திற்கு முன்னாடி ஐந்து நாள் மிகச் சிறப்பாக நடந்தேறியது.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத் வரவரமுநயே நம;

(ஸ்ரீ உ வே சதாபிஷேகம் கோவிந்தநரஸிம்ஹாசார்ய ஸ்வாமி, ஸ்ரீரங்கம்)

ஸ்ரீமதித்யாதிப்படி எழுந்தருளியிருக்கும் ப்ரதிவாதிபயங்கரம் காதி க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் சதாபிஷேக மஹோத்ஸவத்தில் அடியேன் விண்ணப்பித்த விஷயங்கள் சதாபிஷேக மலருக்காக ஈண்டு ஒரு கட்டுரையாக ஸமர்ப்பிக்கப்படுகிறது.

## "நெடுமாற்கடிமை"

இத்திருவாய் மொழியின் ஸாரத்தை விண்ணப்பிக்கக் காரணம் சதாபிஷேகம் கண்டருளும் ஸ்வாமி, ப்ரதிவாதிபயங்கரம் அண்ணா திருவம்சத்திலுதித்தவர், ப்ரதிவாதிபயங்கரம் அண்ணா தமக்கு "ஸ்ரீ வைஷ்ணவதாஸன்" என்பதையே தாஸ்யநாமாவாகக் கொண்டிருந்தார், இவரும் அதே தாஸ்ய நாமமுடையராய், அது விளங்க ஏறக்குறைய நூறு திருநாமங்களைத் தம் சதாபிஷேக மஹோத்ஸவ வ்யாஜத்தால் கூட்டி ஆராதித்து வருகிறுராகையாலே இந்த ஸ்வாமிக்கு பாகவதவைபவத்தை ப்ரதிபாதிக்கும் "நெடுமாற்கடிமை" மிக உகப்பை விளைக்கும் என்பதேயாம்,

நம்மாழ்வார் அருளிச்செய்த 100 பதிகங்கள் கொண்ட திருவாய மொழியை நேரில்கேட்டுப் பட்டோலைகொண்டவர் மதுரகவியாழ்வார் அவர் ஈடுபட்டது "பயிலும் சுடரொளி" "நெடுமாற்கடிமை" இவையிரண்டிலுமேயாம், இவையிரண்டும் முறையே பாகவதசேஷத்வத்தையும், பாகவதர்களின் போக்யதையையும் ப்ரதிபாதிப்பதால் இவை இரண்டிலும் ஈடுபட்ட மதுரகவிகள் ததீயாக்ரேஸரரான நம்மாழ்வாரையே விஷயமாகக் கொண்ட "கண்ணிநுண்சிறுத்தாம்பை" அருளிச்செய்தார்.

ஆகவே நெடுமாற்கடிமை பாகவத வைபவபரம். இனி நெடுமாற்கடிமையின் ப்ரமேயத்தையும் பாட்டுக்களின் பொருள்களையும் சுருங்க விண்ணப்பிக்கிறேன்,

இத்திருவாய்மொழிக்குக் கீழ் "கண்கள் சிவந்து" என்றும் 'கருமாணிக்கமலே' என்றும் இரண்டு திருவாய் மொழிகள் சென்றன அவையிரண்டாலும் 'ஆத்மா பிறர்க்குமுரித்தல்ல, தனக்குமுரித்தல்ல, என்றும் அநந்யார்ஹசேஷத்வம் சொல்லப்பட்டது இவ்வர்த்தம் ப்ரணவத்தில் மத்யமபதமாய அவதாரணர்த்தகமான உகாரத்தாலும், திருமந்த்ரத்தில் மத்யமபதமான நமச்சப்தத்தாலும் சொல்லப்பட்டது அநந்யார்ஹ சேஷத்வப்ரதிபாதகங்களான உகார நமஸ்ஸுக்கள் ததீயசேஷத்வத்தை எங்ஙனே சொல்லும்? என்றல்— அநந்யார்ஹசேஷத்வத்துக்கெல்லை ததீயசேஷத்வமேயாம் ததீயர்க்கு "எந்தம்மை விற்கவும் பெறுவார்களே" என்கிறபடியே க்ரயவிக்ரயார்ஹனானபோதுதான் பகவச்சேஷத்வமே நிலை நின்றதாகும்

பகவச்சேஷத்வத்தளவில் நிஸ்ருல் ஐச்வார்யாதிகளையும் புருஷார்த்தமென்று ப்ரமித்து பகவச்சேஷத்வத்திலிருந்து மீளலாம் தன்னை ததீயசேஷபூதனாக உணர்ந்தால் மீள ப்ரஸக்தி கிடையாது

ஆகவே ஐச்வர்யம் — ஆத்மலாபம் - பகவச்சேஷத்வம் — எம்பெருமானுயிருக்கை, இவ்வனைத்தும் தாம்பற்றின பாகவத சேஷத்வத்தோடு ஒவ்வாதென்று எடுத்துக்கழிக்கவும் போராது — இப்படிப்பட்ட பாகவத சேஷத்வமாகிற புருஷார்த்தமே காலதத்வமுள்ளதனையும் எனக்கும் என்னோடு ஸம்பந்தமுடையார்க்கும் வாய்க்கவேணும் என ப்ரார்த்தித்து முடிக்கிறார், நம்மாழ்வார்

ஸ்ரீ ராமாயண புருஷர்களில் ஸ்ரீ சத்ருக்நாழ்வான் இவ்வர்த்தத்தைக் கைக்கொண்டார். அடுத்து இவ்வாழ்வாரும் இவரவயவபூதர்களான மற்றை யாழ்வார்களும் மதுரகவியாழ்வாரும் நம் ஆசார்யர்கள் எல்லாரும் கைக்கொண்டார்கள்

இவர்கள் அனைவருமே தங்களுக்குத் ததீயத்வம் ஸித்திக்கவும் தாங்கள்பற்றின பாகவதர்களுகப்புக்காகவும், தாம் ததீயசேஷபூதராகிலும் எம்பெருமானைத் தொட்டுக் கொள்கிறார்கள் ஆகவே ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்தில் "ததீயசேஷத்வம்" ஓர் சிறந்த அர்த்தமாகிறது

இனி "நெடுமாற்கடிமை" திருவாய்மொழியின் பாசுரங்களின் அர்த்தங்களை சுருங்கக் காணலாம்



முதற்பாட்டில் நாட்டார் விரும்புகிற ஐச்வர்ய புருஷார்த்தம் தாம் பற்றின பாகவத சேஷத்வத்தோடு எடுத்துக் கழிக்கவும் பாத்தம் போராதென்கிறார்

'தமக்கு பாகவத சேஷத்வம் ஸித்தித்தது எம்பெருமானருளாலே' என்றும், அவ்வருளைப் பெறத்தாம் செய்தது எம்பெருமானுக்கு அடிமை செய்வதுபோன்ற ஓர் அநுகாரமாத்ரமே என்றும் அவன் நெடுமால் பெரியோனாகையாலே தன் சேஷித்வத்தின் எல்லையைக்காட்டித் தம்மை சேஷத்வத்தின எல்லைநிலமான பாகவதசேஷத்வத்திலே நிறுத்தினன் என்கிறார்

அல்லது — நெடுமாலென்று வ்யாமோஹமாய் எம்பெருமான் இவரிடத்துக்கொண்ட வ்யாமோஹத்தால் இவரை அடியார்க்கு ஆட்படுத்தினனும் இத்தால் தம்மிடமிருந்த துஷ்கர்மங்கள் தம்மிடம் சொல்லிக் கொள்ளாமல் தம்மை வஞ்சித்து ஓடிவிட்டனவாம்

அவன் சேஷித்வம் கண்டும வ்யாமோஹத்தாலும் ததீயசேஷபூதரான தாம் அவனடியாரடியே கூடுமது தவிர்ந்து தம் புருஷார்த்தத்துக்கு நாலுமூன்றுபடிகீழான மூவுலகாகிற ஐச்வர்ய புருஷார்த்தத்தைப்பற்று வேனே என்கிறார்

இரண்டாம் பாட்டால் — 'வியன்மூவுலகுபெறினும் — போய்த்தானே தானே யானாலும்" என்று ஐச்வர்ய கைவல்யங்களை எடுத்து "புயல் மேகம்போல் திருமேனியம்மான் புனைபூங்கழலடிக்கீழ் சயமேயடிமை தலைநின்றார்" என்று எம்பெருமானின் வடிவழகிலும் திருவடியின் ஒப்பனையழகிலும் தோற்று ஸ்வயம்ப்ரயோஜநமாக எல்லா வடிமைகளையும் செய்யுமவர்களின் திருத்தாள்களை வணங்கி இச்சரீரத்தோடே இவ்வுலகிலே ப்ரயோஜநமான இன்பம் பெற்றேன், எனக்கு மற்றவை புருஷார்த்தமல்ல வென்கிறார்

மூன்றும்பாட்டால் — எம்பெருமானின் உலகமளந்தபொன்னடிக்கு நல்லராய், வடிவுசிறுத்து ப்ரபாவம் கனத்திருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் நான் இங்கே திரியும்படி என்னைப்பணி கொண்டார்கள்; இப்படிப்பட்ட எனக்கு உலகளந்தவனுடைய அதிபோக்யமான திருவடிகளில் புகுவது ஒவ்வாது என்கிறார்

நாலாம்பாட்டில்—ஸ்ரீவைஷ்ணவர்கள் உகக்கும்படி பகவத்விஷயத்தில் அடிமைகள் மனோவாக்காயங்களுக்கு ஸித்திக்குமாகில், அவர்கள் ஸஞ்சாரத்தால் சிறப்புப்படைத்த இவ்வுலகிலிருப்பே புருஷார்த்தம் என்கிறார், "பொங்கேழ் புகழ்கள் வாயவாய்" (பொங்கி யெழாநின்றுள்ள கல்யாண குணங்கள் வாயிலேயுளவாய்) என்று வாசிககைங்கர்யத்தையும். புலன்கொள் வடிவென்மனத்தாய்" (எல்லா இந்த்ரியங்களையும் அபஹரிக்கவல்ல வடிவு என்மனதிலே கிட்டிநிற்பதாய்) என்று மானஸிக கைங்கர்யத்தையும், "அங்கேய்மலர்கள் கையவாய்"— அவ்வடிவுக்கநுரூபமான மலர்கள் கையிலே உளவாய்) என்று காயிககைங்கர்யத்தையும் குறிப்பிட்டு இவை "வழிபட்டோடவருளில்" முறையுடன் செல்லும்படி எம்பெருமான் அருளுவனேயானால்— அதாவது மனோவாக்காயங்கள் அவன் திருவடிகளிலே நிரந்தரமாக அடிமைசெய்யும்படி அவன் ப்ரஸாதத்தைப்பெறில் "இங்கே திரிந்தேற்கிழுக்குற்றென்" பாகவதப்ரீதிரூபமான பகவத்கைங்கர்யத்தை அவன் ப்ரஸாதத்தாலே இங்கேபெறில் எனக்கு அதுவே புருஷார்த்தம் என்கிறார்

ஐந்தாம்பாட்டு-கைங்கர்யத்திலேயே ஈடுபட்டு, அவன் ப்ரஸாதத்தை பெற்று நித்யகைங்கர்யம் பண்ணும்படியாகப் பரமபதத்தைக்கிட்டி எம்பெருமானால் ஆநந்தமடைவிக்கப்படுவதாயிருந்தாலும் அத்துடன் கீழ்ச் சொன்ன ஐச்வர்யகைவல்யங்கள் கிடைக்கப் பெற்றாலும் அவைகள் மிகவும் தாழ்ந்தசரீரத்தைப்பெற்றுவைத்தும் நித்யஸூரிகளும் குமிழிநீருண்ணும் எம்பெருமானின் கல்யாணகுணங்களை நித்யஸம்ஸாரியாய் அந்த குணங்களுக்கு அடைவில்லாத நான் அறிந்து அவ்வனுபவம் உள்ளடங்காமல் சொல்லாய்ப் புறப்பட்ட திருவாய்மொழியாகிற அம்ருதத்தை அநுபவிக்கையோடொவ்வா தென்கிறார். "தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள்" என்கையாலே இத்திருவாய்மொழிபாடுகை ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் அடிமைசெய்ததாகிறது

ஆறும்பாட்டில்—ஐச்வர்யாதிகளும், பரமசேஷியாய் உலகின் உத்பத்தி—ரக்ஷணம் நாசம், மூன்றுக்கும் காரணமான ஸர்வேச்வரனுடைய வீற்றிருந்தேழுலகும் தனிக்கோல்செல்லவீவிலசீர் ஆற்றல் மிக்காளுகையாலுண்டான ஆனந்தமும், தன்னிகரில்லா குவலயாபீடத்தை முடித்தவனாய், திருவாழியாழ்வானைக் கையிலுடையனாய், கொடிய அசுரர்களைத் தகர்க்கும் பெரியதிருவடியை நடத்துமவனான எம்பெருமானின் எல்லையற்ற ஒப்பற்ற கல்யாண குணங்களைத் திருவாய்மொழி முகத்தால் அனுபவிக்குமநுபவத்தோடு ஒவ்வாதென்கிறார்,



ஆநந்தங்களில், எம்பெருமானுக்குண்டாகும் ஆநந்தம் உயர்ந்ததென்னப்படுகிறது. உண்மையில் திருவாய்மொழிமுகத்தால் பகவத்குணங்களை அநுபவிக்கும்போதுண்டாகும் ஆனந்தத்துக்கு பகவதாநந்தமும் நேராகாது என்கிறார்,

ஏழாம்பாட்டு—திருவாய்மொழியால் ஏற்படும் குணாநுபவம் பகவதநுபவமேயாம். ஆனால் அந்த அநுபவமும் தமக்குத் தனியாகக் கூடாது; பரமபாகவதர்களுடன்கூடி, திருவாய்மொழியால் பண்ணப்படும் பகவதநுபவமே காலதத்வமுள்ளதனையும் தமக்கு ஸித்திக்கவேணும் என்கிறார்

எட்டாம் பாட்டு—கீழ்ப்பாட்டில் 'அவனடியார் நனிமாக்கலவியின்பமே நாளும் வாய்க்க நங்கட்கு' என்று பாகவதர்களோடு கூடிக்குலாவுதலே தமக்குப் புருஷார்த்தமென்றார், இதில் அதுவும் வேண்டா, எம்பெருமானின் திருப்பாற்கடல் சயனத்திருக்கோலத்தில் ஈடுபட்டதமர்கள் கூட்டத்தைக் காணவேணும், அதுவே புருஷார்த்தமென்கிறார், இவரையடியொற்றியே குலசேகராழ்வாரும் "மெய்யடியார்கள் தம் ஈட்டம் கண்டிடக் கூடுமேல் அதுகாணுங்கண்பயனாவதே" என்றருளிச் செய்தார்.

ஒன்பதாம்பாட்டில்—"கோதிலடியார்தம் தமர்கள் தமர்கள் தமர்களாம் சதிரே வாய்க்க தமியேற்கு" என்று எம்பெருமானின் விரோதிநிரஸநசீலதையிலும் ※ஆழ்வார்களின் சேர்த்தியிலும் எம்பெருமானின் பருவத்திலும் அழகிலும் தோற்றிருக்கும் அநந்யப்ரயோஜநரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய அடிமையின் எல்லையிலே நிற்கவேணும், அதுவே புருஷார்த்தம் என்கிறார்

பத்தாம்பாட்டில்—கீழ்ப்பாட்டில் அபேக்ஷித்த பாகவதசேஷத்வத்தின் எல்லை நிலமே புருஷார்த்தம், அது எனக்கும் என் ஸம்பந்தம்

※ஆழ்வார்கள்—திவ்யாயுதங்கள்

பெற்றவர்களுக்கும் "ஊழிதோறூழியூழி வாய்க்கதமியேற்கு" என்று காலதத்வமுள்ளவளவும் வாய்க்கவேணுமென்கிறார். இப்பாட்டில் எடுக்கும் பாகவதர்களை எம்பெருமானின் திருமேனிநிறத்திலும் நான்கு திருத்தோள்களிலும் கையார் சக்கரத்திலும் ஆழங்கால்பட்டிருப்பர்களாய் எம்பெருமானைவிட்டுப் பிரியாதவர்கள் என நிரூபித்து "நீக்கமில்லா அடியார் தம் அடியார் அடியார் அடியார் எங்கோக்கள்" என்று அவர்களின் சேஷத்வத்தின் எல்லைநிலத்திலே நிற்பவர்களைத் தமக்கு ஸ்வாமியாய்ச் சொல்லி அவர்கள் குடிகளாய்ச் செல்லும் நல்லகோட்பாடு காலதத்வமுள்ளவளவும் வாய்க்கவேணும் என்கிறார்.

பதினோராம் பாட்டு—இத்திருவாய்மொழி கற்றவர்கள் பாகவத சேஷத்வம்பெற்று "நல்ல பதத்தால் மனைவாழ்வர் கொண்டபெண்டிர் மக்களே" என்று பாகவதபரிசர்யைக்குப்பாங்காம் அநுகூலபார்யா புத்ராதிகளைப் பெறுவர் என்கிறார்.

இங்கு "சயமே அடிமை தலைநின்றார்" என்றும், "கோதிலடியார்" என்றும், "நீக்கமில்லாவடியார்" என்றும், மூவகை அடியார்கள் எடுக்கப்படுகிறார்கள். இவர்கள் மூவரையும் "சயமே அடிமைதலைநின்றாராகிறார்—பரதாழ்வான்போல்வார், நீக்கமில்லாவடியாராகிறார்—இளைய பெருமாள்போல்வார், கோதிலடியாராகிறார்—சத்ருக்நாழ்வான் போல்வார், என்று நம்பிள்ளை நிரூபித்துள்ளார்.

இதனை விவரிக்கப்புக்கால் கட்டுரை விரிவடையுமாகையால் இத்துடன் நிற்கிறேன்.

மதுரகவிதாஸன்
தி. அ. ச. கோவிந்தநரஸிம்ஹதாஸன்

ஸ்ரீ:

# வைதிகதர்சனப்ரசாரம்

(ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் ஆசிரியர் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி ப்ரதிவாதிபயங்கரம் ஜகத்குரு காதி கிருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் சதாபிஷேக மஹோத்ஸவத்தை முன்னிட்டு



ப்ரதிவாதிபயங்கரம் அண்ணா ஸந்நிதியில் 27—8—81 அண்ணா திருநக்ஷத்திரத்தன்று நிகழ்த்திய உபன்யாஸத்தின் சுருக்கம்)

வேதவேதாந்தங்களையும், ச்ருதீதிஹாஸபுராணங்களையும், பழந்தமிழ் இலக்கியங்களையும் நடுநிலைநின்று ஆராய்ந்தால் விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவதர்சனமே வைதிகதர்சனம் என்று எவர்க்கும் விளங்கும். இதற்கு பௌத்தம், ஜைனம் முதலான பாஹ்ய மதங்களாலும், அத்வைதம், சைவம் முதலான குத்ருஷ்டி மதங்களாலும் நலிவு ஏற்பட்ட காலங்களில் ஆழ்வார்களும், நாதயாமுன யதிவரர் தொடக்கமாக மணவாளமாமுனிகள் ஈருகவுள்ள ஆசார்யர்களும் அவதரித்து, இந்த தர்சனத்தை அசைக்கமுடியாதபடி செய்தருளினார்கள்

"நாட்டிய நீசச்சமயங்கள் மாண்டன நாரணனைக்
காட்டிய வேதம் களிப்புற்றது தென்குருகைவள்ளல்
வாட்டமிலா வண்டமிழ் மறை வாழ்ந்தது மண்ணுலகில்
ஈட்டிய சீலத்து இராமாநுசனதன் இயல்வுகண்டே"
[இராமாநுசநூற்றந்தாதி]

"சங்கர பாற்கர யாதவ பாட்டப்ரபாகரர் தங்கள் மதம்
சாய்வுற வாதியர் மாய்குவரென்று சதுமறை வாழ்ந்திடுநாள்
... ... ... ...
சீமானிலையாழ்வார் வந்தருளிய நாள் திருவாதிரை நாளே"
[ஆர்த்திப்ரபந்தம்-..]

'சாறுவாக மதம்நீறுசெய்து சமணச்செடிக்கனல் கொளுத்தியே
சாக்கியக்கடலை வற்றுவித்து மிகு சாங்கியக்கிரி முறித்திட
மாறுசெய்திடுகணாத வாதியர்கள் வாய்தகர்த்தற மிகுத்துமேல்
வந்தபாசுபதர் சிந்தியோடும் வகை வாதுசெய்த எதிராசனார்
கூறுமாகுரு மதத்தொடோங்கிய குமாரிலன்மதமவற்றின்மேல்
கொடியதர்க்கசரம் விட்டபின் குறுகிமாயவாதியரை வென்றிட
மீறிவாதில்வரு பாற்கரன் மதவிலக்கடிக்கொடி எறிந்துபோய்
மிக்க யாதவமதத்தைமாய்த்த பெருவீரர் நாளும் மிகவாழியே''
[ஆர்த்திப்ரபந்தம் ..]

என்கிறபடியே இந்த வைதிக தர்சனத்தை நிலைநாட்டியவர்களில்

தலைவர் எம்பெருமானாரேயாகையால் இந்த தர்சனத்துக்கு "எம்பெருமானார் தரிசனம்" என்றே நம்பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்தார்.

பூர்வாசார்யர்கள் காலத்திற்குப் பிறகும் சதுச்சாஸ்த்ரவித்வான்களான நூற்றுக்கணக்கான பெரியோர்கள் அவதரித்து, இந்த தர்சனத்தை ரக்ஷித்துப் போந்தார்கள். மாமுனிகளின் அஷ்டதிக்கஜங்களில் ஒருவரான ப்ரதிவாதிபயங்கரம் அண்ணாவும், அவர் வம்சத்தில் உதித்த பல பெரியோர்களும் அந்தப் பணியைச் சிறப்பாகச்செய்தவர்கள் இப்போது சதாபிஷேகம் கண்டருளும் ஸ்வாமியின் திருத்தகப்பனாரான காதி ஸ்ரீ அநந்தாசார்யஸ்வாமி வடநாட்டிலும், தென்னாட்டிலும் பல வாதசபைகளில் அத்வைதிகள் சைவர்கள் முதலான குத்ருஷ்டிகளின் மதங்களை வென்று விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்தை நிலைநாட்டியருளினார் பல க்ரந்தங்களின் மூலமும் இப்பணியைச் செய்தருளினார் தற்காலம் ஸ்ரீ காஞ்சீ மஹாவித்வான் ப்ர ப அண்ணங்கராசார்ய ஸ்வாமி க்ரந்தங்களின் மூலமும், உபந்யாஸங்களின மூலமும் இப்பணியைச் சிறப்பாகச் செய்துவருகிறார்

இக்காலத்தில் இந்த வைதிகதர்சனத்தை வெற்றிகொள்ள முடியாமையாலே குத்ருஷ்டி மதங்கள் பல வேஷங்களைப்பூண்டு, அடுத்து கெடுத்தல் முதலான தகாதமுறைகளில் (இந்த வைதிக தர்சனத்தை) அழிக்கப்பார்க்கின்றன அத்வைதிகள் 'எம்மதமும் சம்மதம்' என்னும் சர்வமதசமரசவாதிகளாகமாறி, ஸ்ரீ வைஷ்ணவர்களையும் அப்படி மாற்றி வருகின்றனர் இந்த வாதங்களின் பொய்ம்மையை நிலைநாட்டி, நம் தர்சனத்தை ரக்ஷிக்கவேண்டியது தற்காலத்திலுள்ள விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ வித்வான்களுக்கு முக்கியமான கடமையாய் உள்ளது

தற்சமயம் பண்டரிபுரத்தில் சாதுர்மஸ்யம் செய்து கொண்டிருக்கும் காஞ்சீகாமகோடி பெரியபீடாதிபதி திருப்பதி கேந்த்ரீய ஸம்ஸ்க்ருத வித்யாபீடத்தில் ரீடர் பதவியை வகிக்கும் ஸ்ரீ V ஸ்வாமிநாதன், -M A., M.Lit. என்பவர் மூலம் ஸ்ரீபாஷ்ய அதிகாரிகளான பல வித்வான்களுக்கு "சாதுர்மாஸ்ய ஸங்கல்ப வ்யாஸபூஜோபஹார:" (சாதுர்மாஸ்ய ஸங்கல்ப வ்யாஸபூஜையில் காணிக்கை) என்னும் தலைப்புடன் ஒரு சிறு வெளியீட்டை அனுப்பியிருந்தார் இவ்வெளியீட்டின்



இரண்டாம் பக்கத்தில், தற்சமயம் பரமபதவாஸியான திண்டுக்கல் (அட்வகேட்) ராமஸ்வாமி ஐயங்கார் 'சங்கரருக்கும் ராமாநுஜருக்கும் முக்கியமான விஷயங்களில் கருத்து வேற்றுமை இல்லை' என்று பொருள் பட எழுதிய ஆங்கிலக் கட்டுரை அச்சிடப்பட்டுள்ளது.

இவ்வெளியீட்டின் ஐந்தாம் பக்கத்தில் சாங்கரபாஷ்யத்திலிருந்து 1—1—4வாக்கியம் ஒன்றும், ராமாநுஜருடைய ஸ்ரீ பாஷ்யம் 4—1—3 4—4—4ஆகியவற்றிலிருந்து சில வாக்கியங்களும் அச்சிடப்பட்டுள்ளன; அவை பின்வருமாறு:—

"ஆஹம் ப்ரஹ்மாஸ்மி" இத்யேததவ ஸாநா ஏவ ஸர்வே விதய: ஸர்வாணி சேதராணி ப்ரமாணநி (சாங்கரம் ப்ரஹ்மஸூத்ர பாஷ்யம் 1—1—4) உபாஸ்யம் ப்ரஹ்ம உபாஸிது: அந்யத்வேநோ பாஸ்யம், உத உபாஸிது: ஆத்மத்வேந இதி.........உபாஸிது: ஆத்மேத்யேவோபாஸ்யம்.........யதா ப்ரத்யகாத்மந: ஸ்வசரீரம் ப்ரதி ஆத்மத்வாத். 'தேவோஹ:' 'மநுஷ்யோஹம், இத்யநுஸந்தாநம், ததா ப்ரத்யகாத்மநோபி ஆத்மத்வாத் பரமாத்மந'......அஹமித்யேவாநுஸந்தாநம் யுக்தம்...... அத உபாஸிது: ஆத்மத்வேந ப்ரஹ்ம உபாஸ்யம்—இதி ஸ்த்திதம் (ராமாநுஜீய ப்ரஹ்மஸூத்ர பாஷ்யம் 4 -1—3) அவிபாகேந, அஹம் ப்ரஹ்மாஸ்மி இத்யேவாநுபவதி (ராமாநுஜீய ப்ரஹ்ம ஸூத்ரபாஷ்யம் 4—4—4)

இவற்றிலிருந்து 'இரண்டாம் பக்கத்தில் சங்கரர் ராமாநுஜர் இருவர்கொள்கையும் ஒன்றே என்னும் D, ராமஸ்வாமி ஐயங்காரின் கட்டுரைக்கு, 5ம் பக்கத்திலுள்ள இரு மதாசார்யர்களின் பாஷ்யங்களிலுள்ள இவ்வாக்கியங்கள் ஆதாரமாயுள்ளன, என்று காமகோடிப் பெரிய பீடாதிபதி கருதுவதாகத் தெரிகிறது. இந்த இரண்டு பாஷ்யங்களின் வாக்கியங்கள் ஒரே பொருளை எவ்வண்ணம் தெரிவிக்கின்றன என்பதற்கு எந்த விளக்கமும் கொடுக்கப்படவில்லை, இதில் விளக்கத்தைப் பெறவிரும்பி, இவ்வெளியீட்டை நமக்கு அனுப்பிய திரு. V ஸ்வாமிநாதன் அவர்களுக்கு நாம் 13—8—81 அன்று ரிஜஸ்தர் தபால் மூலம் கடிதம் எழுதி, ஆதிசங்கரரின் கருத்தை அத்வைத பண்டிதர்களின்

...ஸஸ்ஸிலும், ஸ்ரீராமாநுஜரின் கருத்தை விசிஷ்டாத்வைத பண்டிதர் ...ஸஸ்ஸிலும் நிர்ணயம் செய்து, காமகோடி பீடாதிபதிகளின் வெளியீடு ...ர்மையானதா, மோசடியானதா என்பதை நிர்ணயிக்கவேண்டும் ...று அறைகூவியிருந்தேன். இன்றுவரை V. ஸ்வாமிநாதனிட ...ருந்தோ, காமகோடி பீடாதிபதியிடமிருந்தோ எந்த பதிலும் இல்லை

முற்காலத்தில் இந்த்ரஜித் முதலானவர்கள் நேரே நின்று போர் ...ந்து வெற்றிகொள்ள முடியாமையாலே மறைந்து நின்று அதர்ம ...த்தம் செய்ததாக இதிஹாஸபுராணங்களில் கேள்விப்படுகிறோம் அது ...ாலவே காமகோடி பீடாதிபதி போன்ற இக்கால அத்வைதிகள் விசிஷ் ...த்வைத ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்தை நேரே வெற்றிகொள்ள முடியா ...மயாலே இத்தகைய மோசடிவழிகளைக் கைக்கொள்ளுகிறார்கள் என்று ...ாங்குகிறது

காமகோடிபீடாதிபதிகளின் சிஷ்யர்களால் நடத்தப்படும் தற்காலப் ...த்திரிகைகளிலும் வைணவத்தை அழிப்பதற்கு இவ்வண்ணமாக ஏராள ...ன பொய்ப்பிரசாரங்கள் செய்யப்படுகின்றன விசிஷ்டாத்வைத ஸ்ரீ ...வைஷ்ணவ வித்வான்களும் இந்த தர்சனத்தைச் சேர்ந்த பத்ரிகைகளும் ...ழிப்புடனிருந்து இத்தகைய பொய்ப்பிரசாரங்களை முறியடித்து, இந்த ...வைதிக தர்சனத்தை ரக்ஷிக்கவேண்டும் என்று பிரார்த்திக்கிறேன் ...ரதிவாதிபயங்கரர், என்று மணவாளமாமுனிகளால் விருது சூட்டப் ...பெற்ற ப்ரதிவாதிபயங்கரம் அண்ணா தம் ஸந்ததியில் மேலும் பல மஹ ...பர்களைத் தோன்றச் செய்து, நம் தர்சனத்தை இத்தகைய ஆபத்துக் ...ளிலிருந்து ரக்ஷித்தருளவேண்டும் என்றும் ப்ரார்த்திக்கிறேன் ... ☀

### ஐப்பசியில் திருமூலம்

'யதிவர புநரவதார பூதரான மணவாள மாமுனிகளின் திருவவ ...ார நன்னாள் பற்பல திவ்ய தேசங்களில் மிகச் சிறந்தமுறையில் கொண் ...டாடப்பட்டது. ஸ்ரீ காஞ்சியில் தேவப்பெருமாள் ஸந்நிதியில் கோயில் ...காண்டருளிய மணவாளமாமுனிகள் பத்து நாட்களும் பகலில் ...லங்கார திருமஞ்சனமும் இரவில் பந்தலில் புறப்பாடும் கண்டருளினர் ...ருளிச்செயல் கோஷ்டி லோகோத்தரமான வகையில் அமைந்தது ...னமும் இரவில் பத்ராதிப ஸ்வாமியின் அத்யத்புதமான உபந்யாஸ ...வைபவம் வாசாமகோசரம் சாற்றுமுறையன்று ஸ்ரீ தேவப்பெருமாள் ...ழுந்தருளிச் சாற்றுமுறை இனிது நிறைவேறியது (அ அ)





ஸ்ரீமதுபயவே. திருமலை திருப்பதி. ப்ரதிவாதிபயங்கரம்.

## அண்ணா ஸ்ரீரங்காசாரியர் ஸ்வாமி

(வைகுண்டவாஸி)

(பத்ராதிப விஜ்ஞாபனம்) அடியேனுடைய ஸாக்ஷாத் பிதாமஹர்க்கு ஸஹோதரர்கள் மூவர்; திருமலை திருப்பதியில் ப்ரதிவாதிபயங்கர ஸ்வாமிகளின் திருமாளிகைகள் இரண்டு. அவ்விரண்டிலும் ஸந்ததி ஏற்படாமலிருந்தது; அவ்விரண்டு திருமாளிகைக்கும்

அடியேனுடைய பிதாமஹஸோதரர் இருவர் ஸ்வீக்ருதராக எழுந்தருளி ஞர்கள் அவர்களில் முதல்திருமாளிகைக்குத் திருக்குமாரர்கள் ஐவர்; இரண்டாவது திருமாளிகைக்குத் திருக்குமாரர்கள் நால்வர்; இவ்வொன் பதின்மரும் சிலவாண்டுகட்குமுன்னமே திருநாடலங்கரித்தனர் அவர் களில் ஸர்வஜ்யேஷ்டர் இங்கு ஸேவை ஸாதிக்குமவர்; ஹைதராபாத் ப்ராந்தங்களில் சிஷ்யஸம்பத்து மலிந்தவர் திருப்பதியில் ஜகத்விக்யாத வித்வத்ஸார்வபௌமராக எழுந்தருளியிருந்த திருமலை அனத்தாண் பிள்ளை புரிசை ஸ்ரீ ரங்காசார்ய ஸ்வாமியின் ஜாமாதா —என்பஹுதவிர அந்த ஸ்வாமி ஸன்னிதியில் நியாய வேதாந்தங்கள் அதிகரித்து வித்வத்வரேண்யராக எழுந்தருளியிருந்தவர்; இவர்க்கு ஸ்வீக்ருத குமாரர் விளங்கிவருகிறுர் ஸ்வாமியின் அடுத்த திருத்தம்பியார்—சின்னண்ணு அண்ணங்கராசாரியர் என்னுந் திருநாமமுடையவர்; அவர்க்கும் புருஷ ஸந்தானமின்றி ஒரு திருமகளேயிருந்தனள் அவளுக்குத் திருக்குமாரர் கள் மூவர்; (குன்றபாக்கம்) திருமலை அனந்தாண்பிள்ளை க்ருஷ்ணமா சாரியர் கோபாலாசாரியர் ஆகிய இருவரும் வித்வச்சிரோமணிகளாயும் தி. அ.பாஷ்யகாரர் லௌகிக பதவியிலும் யசஸ்விகளாய் விளங்கிவரு கிருர்கள், — நித்யஸ்ரீர் நித்யமங்களம் —

ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்

## ஸ்ரீகாஞ்சீ நம்பிள்ளை மஹோத்ஸவ ப்ரகடனம் (துன்மதி ஹு 1981)

ஸ்ரீகாஞ்சீ தேவப்பெருமாள் ஸன்னிதியின் திருமுன்பே திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் நம்பிள்ளைக்கு நாளது கார்த்திகை மாதம் 16ம் தேதி (1—12—81) செவ்வாய்க்கிழமை உத்தராட நக்ஷத்திரத்தில் திருவவ தார மஹோத்ஸவம் தொடக்கமாகி கார்த்திகை மாதம் 25ம் தேதி (10—12—81) வியாழக்கிழமை திருக்கார்த்திகைத் திருநக்ஷத்திரத்தில் சாற்றுமுறையாகும், பத்து நாட்களிலும் அலங்கார திருமஞ்சனமும் இரண்டு வேளைகளிலும் திவ்யப்ரபந்த ஸேவைகோஷ்டிகளும் வித்வான்களின் உபந்யாஸங்களும் நடைபெறும் ஸ்ரீ வைஷ்ணவபக்தசிகாமணிகள் குழாங்கூடியிருந்து அநுபவிக்கக்கூடிய மஹோத்ஸவ மிது சாத்துமுறையன்று ஸ்ரீ யதோத்தகாரி எம்பெருமான் புறப்பாடு கண்டருளி நம்பிள்ளை ஸன்னிதியிலெழுந்தருளியிருந்து நடைபெறும்

இரண்டாயிரம் ரூபாய் செலவில் நடைபெறும் இந்த மஹோத்ஸவத்திற்கு பக்தர்கள் உகந்து யதாசக்தி பொருளுதவி புரிந்து ஆசார்ய ஸார்வ பௌமருடைய இம்மஹோத்ஸவத்தை மிகவும் சிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப் படுகிருர்கள், இங்ஙனம், *P B A. Founder, Sri Nampillai Sannidhi*

Regd No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன்-369

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர். மஹாவித்வான்

# SRI RAMANUJAN

EDITOR:
Mahamahimopadhyaya
P. B. ANNANGARACHARYA, Kanchipuram-631503.

வருட சந்தா ரூ. 10 ஜீவித சந்தா ரூ. 25



ஆழ்வாரெம்பெருமானர் ஜீயர்
திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

காளயுக்தி ஹு மார்கழி மீ

## P. B. அண்ணங்கராசார்யஸ்வாமிகளின் நூல் துறைகள்

1 நாலாயிர திவ்யப்ரபந்த வுரைகள்
2 பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3 ஸகலபூர்வாசார்ய தோத்ர ,,
4 ஆழ்வாராசார்யப்பிரபாவ நூல்கள்
5 இதிஹாஸபுராணசரித்திர ,,
6 ரஹஸ்யார்த்த விளக்க ,,
7 வேதாந்தப் பொருள் விளக்க ,,
8 ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9 வேதவிசாரலக்ஷண நூல்கள்
10 லோகாபிராம உபந்யாஸ ,,
11 பரபக்ஷப்ரதிக்ஷேப ,,
12 உபந்யாஸக ஸௌபாக்ய ,,
13 வடமொழி நூல்திரள்கள்
14 ஹிந்தி பாஷையில் நூல்கள்
15 தெலுங்குபாஷையில் ,,
16 பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள் :
P. B. ANNANGARACHARYA,
Editor, Granthamala, Kancheepuram-631503
என்ற விலாசத்திற்கு அனுப்புக.

If un-deliverd please return to:
*P. B. ANNANGARACHARYA*
Kancheepuram Pin Code 631503




To
Sriman V. Ethirajan B.A.
Head Master
Matharasa Oskania
High School,
ERODE-1
638 001

*Edited and Pblised by P. B. Annangaracharya Swamy*
*and Printed by E. Devarajan at Sri Kamakshi Press*
*44-c; Thirukatchinambi Street, Kanchipuram 631503*